திருவானைக்கா

# ஸ்ரீ அகிலாண்டேஸ்வரி பாமாலை

**காப்பு**

பார்வையின் தீட்சண்யம் தானேற்று உயிருக்குப்
பாதுகாப் பாக நின்று
நேரெதிர் அமர்ந்துந்தன் நோக்கத்தின் சாரத்தை
நிழலாக்கி உலகுக் களிக்கும்
கார்வண்ண மேனியனை கரிமுகக் கடவுளை
காப்பாக எண்ண மிருத்தி
தார்வண்ண மெட்குமுன் தனிச்செம்மை பாதத்தில்
சாற்றினேன் பா மாலையை

1

அகமாள முடியாத பாலகன், அருள்ஞான
அடிபற்ற முடியாத மாணவன்
சமமமான நிலையின்றித் தடுமாறிக் கணந்தோறும்
சரிவிலே யுருளும் சகடம்
ஜெகமாளு முன்மீது தீந்தமிழ் பாபின்ன
தெரியாமல் வந்து நின்றான்
அணுலாண்ட ஈஸ்வரி அவனுக்கு மருளுவாய்
ஆதார மொன்று கொடுத்தே

2

ஆதாரம் நீயென்று ஆனான மும்மூர்த்தி
அமுதுண்ட தேவர் குலமும்
ஈரேழு லோகத்து இன்னுயிர் எல்லாமும்
இன்னுமப் பூத கணமும்
சேதாரம் தவிர்த்தந்த வீட்டிற்குள் நுழையவே
சேர்ந்துன்னை அணுகும் போது
பாதார விந்தங்கள் பற்றுமொரு வழிகாணப்
பாமாலை விளக்க மெடுத்தேன்



3

பூமாலை சூட்டுவார் மக்கள், மனமுவந்து
புகழ்மாலை சூட்டுவார் பக்தர்
தேமாலை சூட்டுவார் தேவர், முனிவர்கள்
செம்மனத் தார மணிவார்
மாமாலை சர்ப்பத்தை அணிந்தவன் தோளுக்கு
மணமாலை சூட்டு முனக்கு
பாமாலை சூட்டுமொரு பாக்கியம் தந்தனை
பாலகன் பிழைகள் பொறுத்தே

4

ஆதவன் சந்திரன் உதிக்கின்ற விழிகளும்
அரும்பிதழ் சிவந்த வாயும்
மாதவக் குங்குமம் தோய்கின்ற நெற்றியும்
மலர்க்கூந்தல் மழை மேகமும்
தீதிலாச் செம்மடல் காதணித் தாடங்கம்
திசையெட்டும் பாய்ச்சு மொளியும்
போதெலாம் நோக்கினேன் பூக்காது விழிகளால்
புகழ்பாடி பார்வை மொழியால்

5

தத்துவச் செல்வியே தரணியின் நாயகி
தவஞ்ஞானத் தளிர்ப் பூங்கொடி
சித்தரும் முக்தரும் சீரடித் தொழநின்ற
சிவஞானச் சுவைப் பைங்கனி
இத்தரை மானுடர் இன்புற்று வாழவே
இருள்நீக்கி விடிய லானாய்
பக்தரும் பாராட்ட பதியானைக் காவிலே
பரந்தவகி லாண்ட உமையாய்

6

காதலால் சங்கரன் கைதொட்ட மேனியின்
காந்தத்தை உணர்வு பார்க்க
ஈதலால் சிவந்திட்ட இருவிழிச் செம்மையை
ஏழையான் உற்று நோக்க
ஆவலால் உன்னருள் அட்சயப் பாத்திரம்
அதுகண்டு பிச்சை கேட்டேன்
ஆதலால் அகிலாண்ட நாயகி என்பக்திப்
பசிதீர்க்க அமுத மிடுவாய்



7

இம்மைக்குப் பொருளாகி மறுமைக்கு அருளாகி
எழுமைக்கும் சொந்த மானாய்
பொய்மைக்குள் உடலாட பொருந்தாத உயிர்வாட
புலனைந்தும் கடந்து நின்றாய்
தூய்மையை இழந்தயிவ் உள்ளத்தி னிருளேயே
துடைக்கின்ற சுடரு மாகி
வாய்மைக்கு வழியின்றித் திரிந்தவென் நாவிலும்
வந்துண்மைக் கவிதை யானாய்

8

சோதனை தருவையேல் தாங்காது உன்பாதத்
தூணையே பற்ற வருவேன்
வேதனை வருமாயின் விழிநீரின் துளிப்பூவை
விண்டுநான் உனக்காகக் குவேன்
சாதனை செய்கிறேன் என்கின்ற மானிடச்
சரித்திரம் சாவு மடியில்
வாதனைப் படும்விதம் பார்த்தபின் என்செய்வேன்
வந்துந்தன் வாசல் விழுந்தேன்

9

தொழுகின்ற நெஞ்சினுள் தூயதாய் எண்ணங்கள்
தோற்றுவித் தருள வேண்டும்
அழுகின்ற கண்ணீரில் அவலங்கள் கரைந்துபின்
அருஞ்சாந்தி நிவல வேண்டும்
எழுகின்ற ஆசைக்கு நங்கூரம் நீயாகி
என்னையும் காக்க வேண்டி
கழுவாயாம் உன்னருள் கமலத்துப் பாதத்தில்
களிப்புடன் சிரம் சாற்றினேன்

10

சூதினில், மங்கையுடற் சூழ்ச்சியில், மதுமயக்கச்
சுழற்சியில் சிக்கா மலும்
சாவினில், பிறப்பினில், சம்சாரச் சேற்றிலடி
சறுக்காமல், தீயகருத் தின்
ஏவலில், நோதலில் இன்னுமம் மூப்பினில்
இடராமல் நிலையாகி யும்
கோவிலில் தேவியுன் சன்னதிக் கருகினில்
குடியேறும் வரமும் வேண்டும்



11

வானுக்கும் மண்ணுக்கும் வளர்கின்ற சொந்தமாய்
மழையொன்று இருப்பதைப் போல்
ஊனுக்கும் உயிருக்கும் தொடர்பான உணர்வுகள்
உள்ளத்துள் சிலிர்ப்பதைப் போல்
தேனுக்கும் நாவுக்கும் அறிமுகச் சுவையொன்று
சிந்தையில் இனிப்பதைப் போல்
தானுக்குத் தானேதான் அந்நியமாய் நிற்கின்ற
தாசனுச் குறவாகு நீ

12

தக்காரும் சான்றோரும் தாழ்கின்ற சென்னியை
தனிக்காந்தி வதன எழிலை
முக்கண்ணன் குளிரவே முத்தமிடும் செவ்விதழில்
முகிழ்க்கின்ற நகை மின்னலை
சுக்கானாய் இருந்தண்ட கோளத்தின் இயக்கத்தைச்
சுற்றுமச் சுட்டு விரலை
எக்காலும் பாடநான் எழுகோடிப் பதிகங்கள்
இன்தமிழில் பதிய வேண்டும்

13

மண்ணோடு எனக்குள்ள பந்தத்தைக் துறவினால்
துணிக்கினற வகைக எறியேன்
புண்ணாகி நெஞ்சமது துடித்தாலும் ஆசைகளைப்
புறங்காணும் வழியு மறியேன்
கண்ணாலும் கருத்தாலும் செய்கின்ற பாவங்கள்
களைகின்ற ஞான மறியேன்
என்னாகு மானாலும் என்னை நீ தடுத்தாள்வாய்
என்னுமொரு உண்மை யுணர்வேன்

14

நிலமாகி, நெருப்பாகி விசும்பாகிக் காற்றாகி
நிலவுலகில் வியாபித்த கோன்
புலனைந்தும் ஒருமித்துப் பூமகளே யுனைக்கண்டு
புனலூற்று வடிவ மானான்
நலனெல்லாம் காக்கின்ற நாயகி உனைக்காண
வருகின்ற பக்த ரெல்லாம்
நயனத்தில் பெருக்கெடுக்கும் நல்லன்புக் கண்ணீரால்
நாளிரவு மறந்து நின்றார்



15

கஞ்சிக்கு உப்பின்றி காலுக்குச் செருப்பின்றி
கருத்துக்குச் செப்ப மின்றி
துஞ்சவும் பாயின்றி சுற்றுக்குத் துணியின்றி
தோற்றத்தில் களையு மின்றி
வஞ்சிக்கு மானிடச் சாதியில் ஒருவனாய்
வதைப்பட்ட நாட்கள் போதும்
தஞ்சமுன் பாதங்கள் சரணமுன் நாமங்கள்
தடுத்தென்னை ஆட்கொள் எம்மா

16

ஜெயமுண்டு சிறப்புண்டு ஜெகமாள வரமுண்டு
திசையெட்டு மிசையு மிண்டு
விஜயங்கள் வெற்றியாய் விளங்கவும் வழியுண்டு
வேளைக்கு அன்ன முண்டு
கவியுண்டு கருத்துண்டு காதுக்கு விருந்துண்டு
கவர்கின்ற தோற்ற முண்டு
இவையுண்டு எவையில்லை இங்குநீ ஜோதியாய்
எழுந்ததருளி வந்த பின்னே

17

வேண்டாத எண்ணங்கள் விருப்பங்கள் குரோதங்கள்
விழைகாமந் தரும் பாவங்கள்
பூண்டோடு இவையெல்லாம் ஒழித்தபின் உன்நாமப்
பூவை நாச்சுரட்டில் கோர்த்து
ஆண்டாண்டு ஆடியில் அரும்வெள்ளி வாரத்தில்
ஆலயம் சுற்ற வருவேன்
தூண்டாத விளக்கெரியும் தூயமணி மாடத்தில்
துலங்குபர மேசு வரியே

18

வேலால் எழுதினாய் காளிதாசன் விசும்புகவி
யாகி உயர்ந்தான், திருமுலைப்
பாலால் எழுதினாய் சம்பந்தன் ஆசுகவிப்
பான்மை பெற்று மலர்ந்தான்
நாவால் சுவைத்ததாம் பூலம் துப்பினாய்
கவிகாள மேகம் பிறந்தான்
பூவால் எழுதுவாய் புன்மைநா உன்பாதப்
புகழ்பாடிக் கடைத் தேறட்டும்



19

புன்னகை அமுதத்தை மாந்துகின்ற சகோரங்கள்
புளித்தநிலா மாற்ற முண்ணும்
கண்ணெழில் காண்கின்ற கடவுளும் மாற்றாக
கங்கையின் அமுத முண்பான்
உன்னருள் ஒளியிலும் ஒருபேத முண்டென்றோ
திருமுருகன் ஆண்டி யானான்
நின்னருள் தடைப்பட்டால் நேருமொரு
நிலையறியேன்
நின்னையே வேண்டி நிற்பேன்

20

பந்தங்கள் அழியவே முதற்சுற்று சுற்றினேன்
பாவங்கள் ஒழியமறு சுற்றும்
சொந்தங்கள் தொடராத நிலைக்கு ஒருசுற்றும்
சுகதுக்கம் மறுக்கஒரு சுற்றும்
அந்தமிலா உன்பாதம் அடையவொரு சுற்றாக
ஐந்துமுறை சுற்றி வந்தேன்
நொந்தநிலை மாறியொரு நோன்புநிலை கண்டேயிச்
சந்தக்கவி சாற்றப் பணிந்தேன்!

21

பிந்து முக்கோணம் பிறகொன்று எண்கோணம்
பிரிகின்ற தசகோண மிரண்டும்
வந்து பதினாறு கோணங்கள் அமைப்பாக
வடிவுறும் எட்டுஈரெட்(டு) தளமும்
முந்து மூவட்ட மானபின்னர் முக்கோட்டுப்
பூபுரம் பதித்தஸ்ரீ சக்ரம்
தந்து இருவட்டாய் செவிமடலில் இலங்கும்
தரணியை உய்விக்க வே!

22

திருச்சக்ரம் தாங்கியதால் சிவந்ததோ செவிமடல்கள்
திருமந்திரம் கேட்ட தாலோ
வரும்பக்தர் குறைகேட்டோ வாழ்பட்டர் பாடுகின்ற
வற்றப்புகழ் மடுத்த தாலோ
திருக்காதில் நாணமுற தேவனவன் செப்பியதோர்
இரகசியச் செய்தி யாலோ
மருக்கெழுந்தே யுனைநாடி வருகின்ற பேர்களுளம்
வழங்கவச் செம்மை யீந்தாய்!



23

கடல்மொண்டு கறுத்துவந்த கார்மேகம் பாடவோ
கருவிழியின் அருள்மழையை யா
படர்நுதற் பான்மையும் பட்டுத்திருக் கன்னமும்
பவளவாய்க் காட்சியும் மா
இடர்ப்பட்டு இடைதாங்கும் இருநகில் பாரமும்
இன்னும்கை கால்க ளழகும்
தொடர்விட்டுப் போகாமல் பாடுவேன் சாம்பவி
தூயமனம் அருளிச் செய்தால்!

24

படியாய்க் கிடந்துமால் பவளவாய் காணவும்
படித்துறையில் மீனாகவும்
கொடியாய் நந்தவனக் காவில்மலர் சொரிந்து
கும்பிட நினைத்த ஆழ்வார்
அடியார் குழாத்துள்ளே அடியவன் ஒருவனாய்
ஆகும் பேராசை கொண்டேன்
பிடியே உன்கோவில் பிரகாரச் சுவற்றிலே
பேசுமொரு கவியாக்கு வாய்!

25

ராஜரா ஜேஸ்வரி ரமணீய நாயகி
ரகுவம்ச கோன் சோதரி
பாகமாய் சிவனுள்ளே வியாபித்த சௌந்தரி
பனிமலை வான் புத்திரி
ஆகமங் கற்றவர் ஜெபிக்கின்ற காயத்ரீ
அருமன்ன பூரணித் தாய்
தாகமாய் வருகின்ற பேருக்கும் கங்கைநீ
தகுலலித சியாம லக்ஷ்மி!

26

நிலாநெற்றி நீரணிந்து நீங்காத குங்குமத்தின்
நிறைவோடு நின்று துலங்க
விலாபற்றி மேகலையும் மேல்மார்பின் மாணிக்க
வில்லாரம் சற்று அலங்க
துலாபெற்ற பாரங்கள் சமமாகத் துடிக்கின்ற
நிலையாகி இடையும் கலங்க
உலாசுற்றி வருகின்றாய் உனைக்காண ஒருகோடி
கண்ணில்லை என்று அழுதேன்!



27

வசந்தமாய் வந்தென்னை வாழ்விக்க வந்துவளே
வான்பாரி ஜாத மலரே
இசைந்தநல் லருளினால் எனதுள்ளம் வென்றவளே
ஏற்றமிகு ஜோதி எழிலே
வசைகேட்டு நான்வாடும் நேரத்தில் வந்தென்னை
வாழ்விக்கும் அமுத மழையே
திசையெட்டு ஆனாலும் நீகோவில் கொண்டுள்ள
திசைநோக்கி சிரம் தாழ்த்துவேன்!

28

மால்கொண்ட மனம்தினமும் மயக்கத்தி லாழுவதை
மாற்றவொரு சக்தி வேண்டும்
கால்கொண்ட போக்கதை கவனித்துக் திசைகாட்டக்
கருவியாய் ஒன்று வேண்டும்
சூல்கொண்ட அறிவுக்குள் ஜோதிக்கரு வளர்ந்துவிட
சூன்யங்கள் அகல வேண்டும்
வேல்கொண்ட கண்ணாளே நீயன்றி இவையெல்லாம்
வேறுயார் செய்யக் கூடும்!

29

சிறியேனை செயற்கரிய செய்தொன்று மறியானை
திருந்தா நாத் தன்மை யானை
அருளாலே முன்னின்று அருங்கவிதை தனில்வுந்தன்
அழகினைப் பாட வைத்தாய்
உருவான பாவிலே உட்பிழை பாவங்கள்
உன்னுளம் பொறுக்க வேண்டி
திருவான தேவியுன் செவிக்குநான் தூதாக
செந்தமிழை வேண்டி நிற்பேன்!

30

கார்பெய்து மும்முறை காசினி செழிக்கவும்
கள்வரில் லாத நிலையும்
தார்வேந்தன் இடத்திலே அமர்ந்ததாட்சி புரிகின்ற
பேர்கள் தவறாத முறையும்
ஆர்வந்த போதிலும் அருங்கொடை தந்துபின்
அள்ளக் குறையாத நிதியும்
சீரானைக் காவுறை அகிலாண்ட நாயகி
சேர்க்கநான் கைகூப்பி னேன்!